# அடைக்கலங்காத்தல்.

(வசன நூல்)

இஃது,

அம்பாசமுத்திரம் தீர்த்தபதி ஹைஸ்கூல்
தமிழ்ப்பண்டிதரும்,
"அம்பைத்தலபுராணம்"
முதலிய அரிய பெரிய நூல்கள் பலவற்றின்
ஆசிரியருமாகிய
ஸ்ரீமத் ஆர். ஹரி ஹர பாரதியார்
இயற்றியது.

---

வேலூர் வூர்ஹீஸ் காலேஜ்
தமிழ்ப் பிரதம பண்டிதர்
பு. க. ஸ்ரீநிவாஸாசாரியரால்
வெளியிடப்பட்டது.

---

1915



விலை அணா இரண்டு.

S. V. Press, Vellore.

# அடைக்கலங்காத்தல்.

(வசனநூல்)

இஃது,

அம்பாசமுத்திரம் தீர்த்தபதி ஹை ஸ்கூல்
தமிழ்ப்பண்டிதரும்,
"அம்பைத்தலபுராணம்"
முதலிய அரிய பெரிய நூல்கள் பலவற்றின்
ஆசிரியருமாகிய

**ஸ்ரீமத் ஆர். ஹரி ஹர பாரதியார்**

இயற்றியது.

---

வேலூர் வூர்ஹீஸ் காலேஜ் தமிழ்ப் பிரதம பண்டிதர்
**பு. க. ஸ்ரீநிவாஸாசாரியரால்**
வெளியிடப்பட்டது.

வேலூர்
சுந்தர விநாயகர் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.



---

1915



விலை அணா இரண்டு.

கடவுள் துணை.

# அடைக்கலங் காத்தல்.

## சிபிமன்னவன் சரிதை.

உலகமெல்லாம் ஒருகோலோச்சித் தண்ணளியால் மன்னுயிரனைத்தையும் வசீகரித்தவனாகிய உசீநன் என்ற தராதிபர்க்கு, அன்பும் அருளும் ஒன்றிக் கலந்து உருவெடுத்தாற்போன்ற சிபி என்ற ஒரு செல்வப்புதல்வன் அவதரித்தனன். அவனுக்குப் புறம்படு பூதவுடம்போடு, அகம்படு பூததையையும் நொடிக்கொருபடித்தாகப் பொலிந்து மேலோங்குதலைக் கண்டு களித்த உசீநர், ஐந்தாண்டில் அவனுக்குஅக்ஷராப்பியாஸஞ்செய்வித்தனர். சிலநாளில் அவர் வித்தத்தால் தமது பொக்கிஷத்தைநிரப்பியதேபோல், வித்தகத்தால் புத்திரனது புத்தியையும் நிரப்பிவிட்டனர். அதனால், இளமை நீங்கி யௌவனம் வாய்க்கப்பெற்ற அச்சிபியும், கலை நிரம்பிய உவாமதி மறுவற்று விளங்கினாற்போல் வயங்குதலானான். உண்மை, உரம், ஒள்ளிய அறிவு, தெள்

ளிய விளக்கம், ஈவு, இரக்கம், நடுநிலைமை, சீர்த்தி இன்னோரன்ன உத்தமகுணங்களால் ஒப்புயர்வற்ற சான்றோனொருவன் உம்பரிடத்துக்கு ஆகியதேபோல், இம்பரிடத்துக்கும் அவனது குலக்காதலாய் வளர்வானொருவன் உளன் என, அச்சிபியைக்குறித்துக் கவிகளிற் புகழ்ந்துபேசிய கவிகளும் பலராவர்.

இங்ஙனம் இவன் இருப்ப, உயர்கதி சார்தற்கு உறும் நெறியிற் படர்வதற்கு உன்னிய உசிநர், புவிப்பெருஞ்சுமையைச் சிபித்தலைமகனது புயத்துணையில் ஏற்றி, வானப்பிரஸ்த மனுஷ்டிப்பதற்கு வரையிடத்தை நோக்கி விரைந்து செல்லுதலும், அந்தச்சிபி யென்னும் தோன்றலோ,

"திங்களேர் மலர்ந்து வெண்குடை மண்டலம்
மன்னுயிர் தோறும் இன்னருள் சுரந்து,
நிறைநிழல் பரப்பி நிற்ப, முறையின்
செங்கோல் திசையெலாஞ் செல்லத், தங்கள்
குலமுதற் பரிதியின் வலனொளி நீவற்கு
ஒற்றை யாழி யுலவ, நற்றவத்
திருமலர்ச் செல்வியும் இருநிலப் பாவையும்
வதுவையிற் புணர்ந்து தன் உரிமைத் தேவியராச்,
சுடர்மணி மகுடஞ் சூட்டி, நெடுநிலம்
மன்னவர் முறைமுறை தன்னடி வணங்க,

வீரமுந் தியாகமும் ஆரமெனப் புனைந்து,
வீர சிம்மாசநத்து வீற்றிருந்து'' *

விளங்கினன்.

யாண்டுபல செல்ல, ஓர்நாள், அச்சிபி வள்ளல் விண்ணுளார்யாவர்க்கும் விருந்தளிப்பதற்கு, இருடியர் புடைசூழ வேள்வியொன்றியற்றிக்கொண்டிருக்கையில், அவனது நடுவுநிலைமையின் வன்மையையும், பூதயையின் செம்மையையும், உதாரகுணத்தின் திண்மையையும் சோதிக்கக் கருதிய தேவேந்திரன் யமன் ஆகிய இவ்விருவரும் முறையே பெரும்பருந்தாகவும் கபோதமாகவும் உருமாறினர். கொன்று தின்னும்பொருட்டுப் பருந்து தன்னைத் தொடர்வதென அச்சுற்றது போல் நடித்த அப்புறவு, 'அபயம்! அபயம்!!' எனக் கதறிக்கொண்டே அச்சிபிசக்கரவர்த்தியின் பாதங்களில் வீழ, உடனே அவ

---

*(அரும்பதவுரை):—திங்கள் - சந்திரன். ஏர் - அழகு. மன் உயிர் - நிலைபெற்ற உயிர்கள். பரிதி - சூரியன். நீவற்கு - தடவுதற்கு, பூசுதற்கு. ஆழி - சக்கரம். திருமலர் செல்வி - இலக்குமி. இரு நிலம் பாவை - பெரிய பூமியாகிய பெண். வதுவை - கல்யாணம். ஆரம் - மாலை.

னும் அதனை, "அஞ்சல்! அஞ்சல்!!" என்று தனது கரத்துணைகளால் எடுத்து நீவிக் கொடுத்து, "கபோதமே! உனக்கு உற்ற தென்னை? விரைவின் கூறுதி; இன்னே அதனை அகற்றிவிடுகின்றேன்" என்று அருள, புறவு புகலுகின்றது:—

"தண்ணளியாற் சிறந்த மண்ணவர்க் கரசே! இவ்வுலகத்திலே பிராணிகள் எண்ணிறந்தன. அவைகளில் ஒவ்வொன்றும் இன்புற்று வாழவேண்டுமென்றே எண்ணுகிற்கின்றது. அதனால், சில பிறர்க்குத் துன்பம்விளைக்கின்றன; சில இன்பமளிக்கின்றன. இங்ஙனமாக, எம்மினமோ, பிறர்க்கு இன்பமேனும் துன்பமேனும்சிறிதும்இயற்றுந்தரத்ததன்று. எமக்கு வாழ்விடமோ காடு; உணவோ கல். இவ்வாருக, நிரபராதியாகிய என்னைக் கொழுத்தபருந்தொன்றுகொன்றுண்பதற்கு உன்னிக்தொடர்தல் நீதியோ? சிறியதைப் பெரியதுநலியாதிருத்தற்பொருட்டன்றே, பலரும் ஒருவனை அரசனுக நினைப்பது. உண்மையரசன் உறங்கினுலும், அவனது ஆஜ்ஞாசக்கரம் ஓயாது உருள்வதாகும் என்பார்களே! அஃது என்னே இலதாயிற்று? கலிகாலம் அடுத்து விட்டதுகொல்? ஹா! ஹா!! என்செய்வேன்!

என்செய்வேன் !! தராதிபரே! இந்தத்தரணியில் தங்கள்தங்கள் ஜீவன் தங்கள்தங்கட்குச் சர்க்கரை என்பதை இன்னும் அறியீரோ? எல்லாந் தெரிந்த நமக்கு என்னே இவ்வேழை விரித்துரைப்பது?" என்று நா நடுங்கப் பலநவின்று சோர்வுற்றது. அதுகண்டு பொறுத அவ்வாண்டகை, சோகத்தால் ஆகமும் அகமும் இளகி வருந்த, தன்னையும் தன் அரசியலையும் பெரிதும் இகழ்ந்துபேசி, அதனை நோக்கி, "புறவே! என்னுயிர் என் உடலைவிட்டு நீங்குவதாயினும், நின்னுயிர் உன்னுடலைவிட்டு நீங்குவதின்று. அஞ்சற்க; அஞ்சற்க" என்று அபயமருளாநிற்கையில், அக்கொடும் பருந்து அவனை அடுத்துநின்று, "எனக்குரிய இரையாகிய கபோதத்தை விட்டிடுக" என்று உரையாடவே, மன்னர்மன்னன் அப்போது விளம்பலாயினன்:—

"பருந்தே! இப்பாராவதம் என்பால் அடைக்கலமாக வந்தடைந்துவிட்டது. ஆகலால், இனி இது நினக்கு இரையாகுமென்பதைச் சொப்பனத்திலுங்கூட எண்ணொழிக. பசிநீக்க விரும்புவையாயின், பால் தருதும்; பழமளிக்குதும்; வேறு எவ்வித உணவை நீ விரும்பினாலும் இப்பொழுதே

அளித்தருள்வோம்; அருந்தக்கடவை'' என, பருந்து, "மன்னவரே! இஃதென்னே அநியாயம்! மன்னுயிரை வேண்டுமுணவளித்துப் போஷித்தல், அறமன்னவர்க்கு உரிய தருமமாயிருக்க, அதனை நீக்கிக் கிட்டின உணவையுந் தட்டிவிடுகின்றீரே! நீதி யாண்டுளதோ அறியேன். நன்று நன்று உமது செங்கோல்! யான் இவ்வாறு எங்குங் கண்டிலேன். பாலும் பழமுந் தருதுமென்றீர். அவை எனக்கு உணவோ? எம்மினமனைத்தும் 'மாமிசபக்ஷிணி' என்று இன்னும் அறியீர்போலும். இப்பொழுதே எனக்கு உள்ள ஆஹாரமாகிய இப்புறுவை என்னிடந் தருவீராக. இன்றேல், எனது ஆருயிர்க்கு இறுதி காண்பீர்'' என்று இயம்பலும், இறைவன், அப்பருந்திற்கும் புறுவிற்கும் இடையில் நின்று ஊசலாடிய உள்ளத்தனாய், ஒன்றும்பேசாமல், அரசனுயிருக்குஞ் சிரமத்தினைச் சிறிதுநேரம் எண்ணியெண்ணி அகம் நோவுற்று அழுங்கி, மீண்டும் அப் பருந்தை நோக்கிக் கழறலாயினன்:—

"பருந்தே!உலகத்திலுள்ளஜீவர்கள்யாவரும் கடவுளருளிய காதலரேயாவர். ஆகவே, நாமெல்லாஞ் சகோதரரேயாவோம். அவ்வாறாயின், ஒன்றை யற்றொன்று உண்ணுவது

ஞாயமாகுமா? பரமபிதாவாகிய கடவுட்கும் இது பொறுக்குமா? வலியுள்ளான் அஃதில்லானை வாட்டின், எல்லாம் வல்ல கடவுளே அவனை வதைபுரியாநிற்பர். உன்னை ஒரு வேடன் கைப்பற்றில், உனக்கு எவ்வாறிருக்குமோ அவ்வாறுதானே இப்புறவிற்கும் இருக்கும். அவரவர்தம் ஜீவன் அவரவர்க்கு அருமையென்பதைப்பற்றி யான் சொல்ல வேண்டுமா? இவ்வாறிருக்க, ஒருபிராணியை மற்றொருபிராணி வதைசெய்வதென்றால், அதை எவர்தாம் சகிப்பார்கள்? சுகவாழ்வு பெற நினைக்குஞ் சீவர்கள், இறுதிக்காலம் இயல்பால் அடுத்துவிட்டாலும், அந்தோ! இன்னுஞ் சிலகாலம் நாம் இங்கு வசிக்கமாட்டோமா என்று ஏங்கியேங்கி உரைத்து இறகின்றனர். இப்படிப்பட்டவர் இடையிற் கொலையுண்பதா யிருக்குமாயின், அந்தக்காலத்தில் அவரது நெஞ்சம் எவ்வாறு குழம்பித் தபிக்குமென்பதை நீ அளவிட்டறிந்துகொள். ஒருவன் ஓர்பிராணியைக் கொலைபுரியுங்கால் அஃதிடும் 'ஹா!' என்றசப்தமும், விடும் 'ஹ-ூ!' என்ற நெடுமூச்சும், சோர் என்று சொரியும் கண்ணீரும், என்னை! வீண்போவனவோ? அல்ல அல்ல.. அப்பாபம் அக்கொலைஞனை வெந்தெரி

கின்ற நிரயத்து உய்த்துத்தீரும் என்றறிதி. ஸர்வேச்வரனாகிய பகவான் இந்நிலவுலகத்தில் ஜீவராசிகளைச் சிருஷ்டிக்குமுன்னரே, அவை உணவெனக்கொண்டு சீவிப்பதற்கு உதகப் பெருக்கமும் ஒஷதிவர்க்கமும் இனிது வளர்வித்திருக்க, இதனை அறியாத சில பேதையர், தாகவிடாய்க்குச் சாராயத்தையும், பசிக்குப் புலாலையும் அருந்தி, அந்தோ! இம்மை மறுமை ஆகிய இரண்டையும் பாழ்படுத்து விடுகின்றனர்;

"அலைப்பான் பிறிதுயிரை ஆக்கலுங் குற்றம்;
விலைப்பாலிற் கொண்டு ஊன்மிசைதலுங் குற்றம்;
சொலற்பால அல்லாத சொல்லுதலுங் குற்றம்;
கொலைப்பாலுங் குற்றமே யாம்"

என்றிருத்தலையும் ஓரார். இவர் இங்ஙனம் இழியூனை உண்பதன் நோக்கம், வருநோய் அகலுமென்றோ? நரை திரை மூப்பு நாடாவெனவோ? சாவு தவிருமென்றோ? யாதோ? யாம் அறியோம். இயல்பிலேயே இவ்வுடலம் அடுத்தாரை அகலவோட்டும் தீநாற்றச் சுமையாயிருத்தல் போதாதென்று, மற்றுமுள்ள பெருநாற்றமுள்ள இழிதசைகளையும் வாரிவாரி உண்மடுத்துவிடுகின்றனரே! என்ன அநியாயம்! உண்

ணுமட உணவில் ஈயொன்று கிடந்தாலும், 'சீ'! என்று அதனை அகற்றுமிவர், பாழ்த்த ஊழ்த் தலை எவ்வாறே புசித்துவிடுகின்றார்!. சை! சை!! அருவருப்பென்பதை இவர் என்றும் அறியார் போலும்! பிறவுயிர்களின் மலப்பாண்டமாகிய களேபரத்தைச் சிறிதுங் கூசாது வாய்மடுத்துண் பாரது வயிற்றுக்கிடங்கை, அப்பிராணிகளை இட்டு வருத்தும் கொடுநரகக்கிடங்கென்றாலும், கொல்லைக்கிடங்கென்றாலும் குற்றம் எள்ளள வும் உளதாகாது. தீண்டவுங்கூடாத சிற்சில பாபஜந்துக்களைப்பற்றிச் சேதித்துப் பசனஞ் செய்து பசிதீர்க்கும் ஒருவனையே, இவ்வுலகம் பாவிபினும் பாவியென எடுத்திகழுகின்றது. இப்படியெல்லாம் இருக்க, இழிபுலாலுண்ணல் என்னே? தவிரவும், கொன்றுண்பான் கொடுக் குந் தானமும், குறிக்கொள்ளும் ஜப தப விர தங்களும் பயன்படுவன அல்லவெனவும், கொல் லாவிரதியை எல்லாவறங்களும் அதர்விணய் வந் தடைகின்றனவெனவும் ஆன்றோர் உரைப்பர். பாகதிக்குக் கொல்லாமையே நல்லாறுவது போல், நரகதிக்குறும் நெறி உயிர்செகுத்துண் ணுதலேயாம் எனச் சாஸ்திரங்கள்பல முறை யிடுகின்றன. கொல்லாதவனை எல்லாவுயிருங் கைகூப்பித் தொழுகின்றன. அவனது பெரு மைமையை,

"நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் தலை"

என்று பெரியோரும் வியந்துள்ளார். அன்றியும், ஜீவகாருண்ணியமுள்ள செவ்வியோர், வான்கதியே வாய்ப்பதாயினும், நரகமே நண்ணுவதாயிருந்தாலும், தம்முயிர்க்கு இறுதிகாணும் ஓர் ஸங்கடம் உற்றதேயானாலும், பிறிதின்னுயிர்நீக்கும் வினையை மறந்தும் புரியாராதலின், அவரது வாழ்நாண்மேல் இயமன் எட்டிப்பார்ப்பதுமில்லை. உயிர்வாழ்க்கைக்குக் கொல்லாமைபோல் நலந்தருவது யாதுமிலதெனத் தேர்ந்த அறிஞர், ஒவியத்துருவையுங் கூட அழித்தல்செய்கின்றிலர். ஆதலான், நீயும் இதனைக் கொன்றுண்ணுதலை வெறுத்தொழிவாயாக. இப்பொழுது நினக்குற்ற தீப்பசி தீரத் தேவாமிருதத்தை விரும்பினையேனும், இன்னே இங்கு அதனைத் தருகின்றேன்" எனக் கூறலும், பருந்து கழறலுற்றது:—

"காவலரே! என்னை இத்துணை வளர்த்துக் கூறியது? எனக்கு வேண்டுவது இப்புறவின் தசையேயன்றி வேறன்று. எனக்கு இதுவே விண்ணவரது அமுதினும் மேலானது. மேலும், விடக்குண்பார்க்கு அதன்மேல் உள்ள பிரியம்

மற்றெதன்மேலும் செல்வதில்லை. வேம்பின் புழு அவ்வேம்பன்றி மற்றெதையும் உண்ணாது. 'ஒட்டகத்திற்கு வேம்பு கரும்பு' என்றபடி, மாம்சபுக்குக்களுக்கு அம்மாமிசத்தின்மேலேயே நாட்டமிருக்குமேயன்றி, பல கந்தமூல பதார்த்தங்களின்மேல் சிறிதும் நாட்டமுறுவதில்லை. அவர்கள் சித்திரித்திருக்கும் ஆட்டையும் கோழியையுங்கூட நாவால் நக்கிப்பார்த்துத் தமது ஆசையைத் தீர்த்துக்கொள்ளுவார்கள் என்றால், வேறு விளம்புவனவும் உளவோ? இப்பொழுதே எனக்குரிய இவ்வுணவை விட்டு விடுவீராக. பசி கடுகுகின்றது; பொறுக்கமுடியவில்லை. உடலை விட்டு உயிர் நீங்குங்கொல் என்று அஞ்சுகின்றேன். விடேரேல், என்னை நீர் கொன்றீராவீர்'' எனவும், சிபி, ஆவியிழப்பினும் அடைக்கலத்தை அகற்றல் அரும்பாதகமும் அவமதிப்புமாகுமென அறிந்தவனாதலின், அதனை நோக்கி, "உவணமே! ஒன்றுகேட்க நினைக்கின்றேன். அதற்கு நீ இசைதல்வேண்டும். என்ன எனின், மனமொப்பி இவ்வடைக்கலப் புறவின் அளவாக எனது ஆகத்தினின்றும் தசையறுத்து இடுவல். அதனை நீ அருந்திப் பசி தீர்த்துக்கொள்ளலாமோ?'' என, அதற்கு அந்தத் தெய்வப்பருந்தும் சிரமசைத்துச் சம்மதந்

தெரிவித்தது. உடனே அங்கு ஓர் தராசு நாட்டப்பட்டது. கன்னந்தட்டொன்றில் கபோதத்தை ஏற்றிய காவலன், மற்றொருதட்டில் தனது மெய்ந்நிரம்பிய தசையனைத்தையும் கொய்து கொய்து வைக்கலாயினன். அங்கங்கள் பல அறுத்திட்டும், ஊனிறைதட்டுச் சிறிதும் கீழ் நோக்குற்றதில்லை. அதுகண்ட அரையன், பருவாலின்றி மலர்முகமும் புன்முறுவலும் உடையனாய், தானே அத்தட்டிலேறி நிற்பானாயினன். நிற்கவே, தட்டிரண்டும் சமனுறுவனவாயின. அதுகண்டு களித்தசிபி, பருந்தை நோக்கி, "இனி யான் உனது இரை. இஷ்டம்போல் எடுத்துப் புசிப்பாயாக" என்று உரைத்தலும், பறவையுருவாயிருந்த அத்தேவரிருவரும் சுயரூபத்துடன் அவன்முன்னர் எழுந்தருளிச் சாற்றலாயினர்:—

" தண்ணளியே தனுவெடுத்துவந்தாற்போன்ற தராபதியே! நின்திறம் உலகமெல்லாம் அறியுமாறே, யாம் ஈண்டு இவ்வாறு இயற்றியதன்றி வேறன்று. நீ இங்கேறியது துலையோ? அன்றன்று; துறக்கமே. நின் மெய்யினின்று நீ அறுத்தெடுத்துப் பரப்பியது தசையோ? அன்றன்று: இசையே. நீ இங்கு நாட்டியது துலாக்

கோலோ? அன்றன்று: செங்கோலே. புவித் தலைவனாகிய சிபிச்சோவே! நீயே உண்மையான வண்மையன். நீயே பேதியாத நீதிமான். நீயே அறத்திற்கு உறையுள்; அடைக்கலம்புரத்தற்கு ஓர் ஆலயம். அன்பும், அருளும், நீதியும், நிறையும், வண்மையும், தண்மையும் ஆகிய நற்குணங்களெல்லாம் இந்நிலவுலகத்துக்கு நீயிட்ட பிச்சையேயாவனவன்றி வேறல்ல'' எனப் பலபட வியந்து வாழ்த்தி, வேண்டும் வரங்களும் நல்கி, தங்கள் நாட்டை அடைந்தனர்.

அப்பால், சிபிசக்கரவர்த்தி, சிலகாலம் பூலோகபுரந்தரன்போல் அரசியற்றி, ஈற்றில் பூதவுடம்புநீத்து, புகழுடம்பால் எங்கும் வியாபித்து ஒளிர்வானாயினன்.

---

## விபீஷணசரணாகதி.

பாலாழியும், பாம்பணையும், பச்சையாலிலையும் பாயலாகக் கொண்டருளிய ஸ்ரீபரந்தாமனே பொல்லாரை ஒழித்து நல்லாரை வாழ்விப்பதற்கு, அயோத்திவேந்தனாகிய தசரதசக்ரவர்த்தி செய்த தவத்தின் பேறாய் அவர்க்குக்

திருக்குமாரராக இராமனென்ற பெயருடன் அவதரித்து, "தந்தைசொல்மிக்கமந்திரமில்லை," "தாய்சொலிற் சிறந்த வாசக மில்லை" ஆதலின், தந்தைதாய்சொற்றவழுது, மனைவியாகிய சீதாபிராட்டியாருடனும் தம்பியாகிய இலக்குமணனுடனும் பற்பல காடும் மலையும் கடந்துசென்று, ஆங்காங்குள்ள முனிவர்கட்கு அபயமருளி, கோதாவரீதீரத்தைக் குறுகி வதிகையில், இலங்காபுரிவேந்தனாகிய இராவணன், வஞ்சனையால் வஞ்சிக்கொடியனைய வைதேகியாரைக் கவர்ந்துசென்றனன். அப்பால், அவ்வீரரிருவரும் பிராட்டியாரைத் தெற்குநோக்கித் தேடிக்கொண்டு சிலகாவதம்சென்று, கிட்கிந்தையை அணுகி, தோழமைகொண்ட சுக்கிரீவனை அரியணைமீதும், அவனுடைய அண்ணனாகிய வாலியை அமரருலகத்தின்மீதும் ஏற்றி, நாடவிடுத்த வாயுகாதலனாகிய அனுமானால் பிராட்டியார் இலங்கையில் தசகந்தரனால் சிறைப்படுத்தப்பட்டிருப்பதை அறிந்து, அங்குச் சென்று அவளை மீட்பதற்கு வாநராதிபதியான கதிரவன்காதலன் உள்ளிட்ட எழுபதுவெள்ளக் குரங்குப் படைகளுடன் தென்னாழிக்கரையை மன்னி, ஸாகர தரணத்தின்மேல் சிந்தைசெலுத்தி வதிவாராயினர்.

இவ்வண்ணம் வாநரப்பிரமுகர் புடைசூழ அநுஜனுடன் ஸ்ரீரகுகுலோத்தமர் எழுந்தருளி விளங்குதலை அறிந்த உத்தமகுணபூஷணனாகிய விபீஷணன், தன் முன்னவனாகிய இராவணனுடைய பதங்களைச் சென்னிமேல் தாங்கிநின்று, மனுகுலக்கொழுந்தாகிய ஸ்ரீராமபிரானது வன்மையையும், சிறையிருக்கும் சுடர்க்கொடியின் கற்புவெம்மையையும், கவிக்குலக்கடற் படையின் திண்மையையும், காலத்தின் தன்மையையும், இலங்கைக்கு இனி வரவிருக்கும் தீமையையும் விரித்துவிளம்பி, பிராட்டியாரை இரகுவீரன்பக்கல் கொண்டுபோய்விட்டு அடைக்கலம்புக்காலன்றி, அரக்கரென்பாரெவர்க்கும் உய்விடம் இல்லையெனப் பன்முறையும் பகர்ந்தனன். அதுகேட்ட ராவணன், தீராமுனிவுடன் அராவெனச் சீறி அவனை அவணின்று அகற்றிவிடலும், வீடணன், "இவ்விலங்கைவிலங்கலில் மலங்கவர் உள்ளத்தாரோடு ஒன்றியுறைந்து இனி யான் கலங்கேன்; தாசரதியின் நேசமுற்றுத் தழைப்பன்" என மதித்து, எரியடர்ந்து புறஞ்சூழ்ந்தவிடத்து இல்லம்நீத்துப் புறத்து விரைந்தோடுவார்போல், அமைச்சர் நால்வர் புடைநெருங்க, அவணின்று எழுந்து, வான்நெறியே படர்ந்து, மகோததியின் உத்தர

திரத்தை உற்று, கருங்கடலொன்றைப் பெருங் கடல்பல சூழ்ந்தாற்போலக் காகுத்தரைச் சூழ்ந்து நிற்கும் குரக்கனிகினியின் கடைப்புறத்து நின்று, கண்ணீர்சொரியக் கைத்துணைமுகிழ்த்து முடிமேல் ஏற்றி, "இராகவா! சரணம்! இராகவா! சரணம்! சரணம்!! சரணம்!!! அருள்புரிந்து காப்பாயாக'' என்று பன்முறை கதறினர். வாநரவீரர்கள்யாவரும், "எவனோ அரக்கன் உளவறிவதற்கு இங்கு வந்துற்று, வஞ்சக மாய்த் தஞ்சமெனச் சாற்றுகின்றான். அவனை அடிமின்; பிடிமின்; அடுத்தாரோடு அவனை அதஞ்செய்ம்மின்'' என்று அதட்டி, அட்டகாசஞ்செய்தெழுகையில், கருணைக்கடலாகிய கருங்கடல்வண்ணன், அவர்களை அவ்வண்ணம் செய்யாதபடி அகற்றி, "அபயமென்றானை ஆதரித்தலே அறங்களெல்லாவற்றுள்ளும் தலையாவது'' எனத் திருவுளங்கொண்டருளி, அடுத்துநின்றாரை நோக்கி, "ஈண்டுச் சரணமென்றானை கொள்ளத்தக்கதோ? தள்ளத்தக்கதோ?'' என, அவர்கள் சொல்லத்தொடங்கினர்:—

சுக்கிரீவன்:—"பொதுவாக, அரக்கர் கொடியர்; பிறர் காணாதபடி உலகத்து உலாவும் மாயம்வல்லர்; வஞ்சம்பயின்ற கன்னெஞ்சர்;

எப்படிப்பட்ட பழிபாபங்கட்கும் இவர் அஞ்சுவதின்று. சேவியைக் கவர்ந்த பாவியின் தம்பி இவன். அவனுல் இவன் இங்குள்ளவற்றை அறிய அனுப்பப்பட்டவனென்பதற்கு ஓர் ஐயமுமில்லை. ஆதலால், இவனை அகற்றலே தகுதி. இவனது வணக்கம் சராசனவணக்கமேயாம்.''

வாலிகாதலன்:-''ஒன்னலரை எந்நெறியினும் நம்புதல் கூடாது. அவர் காலம்நோக்கி இறுத்திவிளைக்கும் காலராவர். இவன் சரணம் புகுந்தானுனும் நம்புதல் தகுதியன்று. இவனைப் பரீக்ஷித்தறிந்தே கொள்ளுதல் தள்ளுதலாகிய இரண்டில் ஒன்றை நிச்சயித்தல்வேண்டும்.''

சாம்பவான்:-''நம்முடன் தீராப்பகைமையைத் தேடிக்கொண்டவன் தசகந்தரனுகிய தென்னிலங்கைவேந்தன். அவ்விலங்கையோ, சேய்மையிலுள்ளது. நமது ஆற்றலை அவன் கண்டுமிலன். அஞ்சற்கு யாதொரு காரணமுமில்லை. இங்ஙனமிருக்க, இவன் அவ்விடத்தினீங்கி இங்குற்றதன் காரணம் அறிதற்கரிதாயிருக்கின்றது. அன்றியும், ஆபத்து நேர்ந்தவிடத்து, அண்ணனைக் கைவிட்டவனுகின்ருனுதலின், இவன்மாட்டு ஐயம் எனக்கு ஒழிந்திலது.''

அப்பால், மைந்தன் நீலன் முதலியவர்களும் தந்தமக்குத் தோன்றியவாறெல்லாம் சொல்லிமுடித்தனர்.

பிறகு, அயோத்திவேந்தன் அனுமானை வினவ, அவனும் முற்கூறியவர்களுடைய அபிப்பிராயங்களனைத்தையுங் கண்டித்து, தனது கருத்தை நிலைநாட்டத்தொடங்கினான்:—"ரகுநந்தனரே! இந்த விபீஷணன், தங்களை உத்தமோத்தமரெனவும், அரக்கர்குலத்தை வேரறுக்க வந்த அவதார புருஷரெனவும் நன்கு ஊகித்தறிந்தவன்; கரன், தூஷணன், திரிசிரசு, வாலி ஆகிய இவர்களை ஹதஞ்செய்து கடலையுங் கடக்கப் பிரயத்தனப்பட்டிருக்கும் நமது ஆற்றலையும் நன்கு உணர்ந்தவன்; அன்றியும், இராவணன் மஹாபாதகனெனவும், வழியலாவழி போம் அழிதொழிலனெனவும், "கண்கூடாப் பட்டது கேடெனினும்" அதனினின்று தப்ப நினையாது அகப்பட்டு அழிபவனெனவும் தெற்றெனத் தெளிந்தவன். அல்லாமலும், இவ்வுத்தமன் சிதையைத் தங்கள் திருவடியிற் சேர்ப்பித்துச் சரண்புகுந்து உய்யுமாறு பன்முறை வற்புறுத்தியும், தீய அத்தசக்கிரீவன் செவிக்கொள்ளாது அகற்றிவிட்டனனாதலின், அவனையும், அரக்கர்குலத்தையும், இலங்கையையும் அறவே

நீத்து, புத்திபூர்வமாகத் தங்களையே தஞ்சமெனக் கண்டு வந்தடைந்தவன். இவை உண்மையன்றி வேறல்ல. யான் முன்னர் தூதாக இலங்கைசேர்ந்தகாலத்து, இவன் எனக்கு உயிர்ப்பிச்சையளித்தவன். மேலும், சொல்லாலும், தோற்றத்தாலும், நடையுடை பாவனைகளாலும் இந்த வீபீஷணன்மீது எனக்கு யாதொரு சந்தேகமுமில்லை. இஃது அடியேன் கருத்து. அப்பால் தேவரீர் திருவுள்ளம்.''

இவையெல்லாம் செவிசார்த்தியருளிய இராமபிரான், தமது அபிப்பிராயத்தை நிலைநாட்டலாயினர்:—

''வாநராதிபரே! தண்டத்தலைவர்களே! கேட்பீராக: நீயே சரணமென்று என்பால்புக்கானை யான் எத்தகைய ஆபத்திலும் கைவிடுவதில்லை. இதற்கு மாறாக அவர் கொடுத்த தடைமொழியும் என்செவிக்கு ஏறுவதன்று. இவ்விபீஷணன் குற்றக்கொள்கலனேயாயினும், தஞ்சமென்றுரைதலால், அஞ்சலென்றருளாது அகற்றிவிடல் என்னாலாவதன்று. சிட்டரை எவரும் புரப்பர். துட்டர் சரண்புகப் புரத்தலே மேன்மை. இச்செயல் ஆன்றோரால் அங்கீகரிக்கப்பட்டதேயாகும். தஞ்சமென்றோரது தவறனைத்

தும் கள்ளத்தக்கதேயெனவும், அவர் கொலைக் குரியராயினும் அதனை விலக்கி அவரைப்போற் றலே நீதியெனவும் அறநூல்பல முறையிடுகின் றன.

"பொய்யாகவேனும், மெய்யாகவேனும், விருப்பாகவேனும், வெறுப்பாகவேனும், மித் திரபாவமாகவேனும், சத்துருபாவமாகவே னும், உள்ளன அறிவதற்காகவேனும், அபகரிப்ப தற்காகவேனும் அற்றம் நோக்கி வெல்லுவதற் காகவேனும், கொல்வதற்காகவேனும், ஒருவன் என்னை அடுத்துச் 'சரணம்' என்ற சொல்லைச் சாற்றுவானேயாயின், உடனே அவனை அடுத் தெடுத்துத் தாங்கிப்புரத்தலே எனக்குரிய கட மைகள் பலவற்றுள்ளும் முற்பட்டதாயிருக்கின் றது. அவன் என்னை வாழ்த்தவேண்டியதுமில் லை; வணங்கவேண்டியதுமில்லை.

"வீரர்களே! இங்கு என்னை அடைக்கல மென்று அடுத்தவன் விபீஷணனே; அவனை யான் காத்தலுங்கூட அவ்வளவுசிறப்பினதன்று; இக்காலத்து அந்த இராவணனே என்னைச் சர ணமெனச் சார வருவானாயினும், அவனை யான் ஏற்றுப் புரந்தாலன்றி, மெய்க்கீர்த்தியென்பது எனக்கு உரியதாவதோ? இனி உங்களையே

யான் இழப்பதாயிருந்தாலும், இந்த விபீஷணனைக் கைவிடமாட்டேன்; விடுவேனேல், யான் ஒருமனிதனாகவுமாட்டேன்.

"ஆபத்து அடுத்திருக்கும்பொழுது அண்ணனைக் கைவிட்ட நன்றிகெட்டவன் இவன் என்கின்றீர். பெற்றோரும் மூத்தோரும் துஷ்டராயின், அவர்களைக் கண்ணோட்டஞ்செய்யாது கடிந்தகற்றலே தகுதியென்று சாஸ்திரங்கள்பல சாற்றுகின்றனவே. அதற்கு என்செய்வீர்? பரதனையொத்த சகோதரரும், பெற்றோருக்கு என்னையொத்த புத்திரனும், உங்களையொத்த சிநேகிதரும் எங்குந்தான் உளராவரா? நண்ணாரிடத்திலிருந்து வந்தவனிடத்து நட்பாடல் தகுதியன்று என்றீர். இங்கு இது சிறிதும் இயைவதன்று. இராவணனன்றி, வீடணன் எனக்கு விரோதியல்லன். இங்ஙனமிருக்க, இவன் எங்குநின்று வந்தாலென்னை? இவன் வாலிவதத்தால் எமக்கும் இராவணனுக்கும் உரிய பலாபலங்களைச் சீர்தூக்கி, உய்யுமாறு இங்கென்னையடுத்துச் சரண்புகுந்தனனென்பதை, இவன் கூறும் சொல்லும் பொருளும் தொனியும் வெளிப்படுத்துகின்றன.

"வாநரவீரர்களே! இங்கடுத்த விடணனை மிகக் கொடியவனென்றே எண்ணிக்கொள்ளுவோம். அவன் நமக்கு என்னகேட்டைத்தான் செய்ய இயலும்? எனது வல்லமையை இன்னும் நீர் அறிந்திலீர்போலும்! என்னை இடுக்கணின்றும் எடுத்துவிடுபவர் நீங்களேயோ? நன்று நன்று! அவ்வெண்ணத்தை அடியோடு ஒழித்துவிடுமின். நினைத்த நொடியிற்றனே நெடிய இவ்வுலகமனைத்தையும் பொடிபடுத்தும் எனது சிறு விரலின் நுனி எனில், இலங்கையிலுள்ள அற்ப இராக்கதரோ எனக்கு எதிராவர்? ஆதலால், இவனால் எனக்குக் கேடு வருவதாயிருந்தாலும், அஃது இவ்வளவினதாகத்தான் இருக்குமென்பதை யான் அறிவேன். அல்லாமலும், அக்கேடு எனக்கு இறுதியை விளைக்குமென்றாலும், இவனை யான் ஒருபொழுதும் கைவிடவேமாட்டேன்.

"மையிருளாலும், பெய்மழையாலும், குளிராலும், கொடிய பசியாலும் வருந்தி, தனது பெடையைப் பற்றித் தன்னிடத்து அடைந்த குரூரனாகிய வனசரனொருவனை, ஆண்புறவொன்று தனது உடலையே உணவாக்கிப் போற்றிப் புரந்ததென்றால், அதனினும் யான் எளியனோ என்ன? அறிவுடையனல்லனோயான்?

அரக்கனொருவனை அரணொனைப் புரந்த இரகுவென்பாரும், வந்த புறவுக்கு உடலைக் கொடுத்து வாழ்வித்த சிபியென்பாரும் எனது குல முதல்வராயிருப்ப, அவர்செல்வழி பின்பற்றாமல் யான் இங்கு வேறுபடுவது மாசற்ற மனுமரபினுக்கு ஓர் வடுவேயன்றோ? மானொன்றினால் மதிக்கு வடுவாகியதுபோல் இராமனொருவன் பிறந்ததனால்ஞாயிற்றுக்கும் வடுவாயிற்றுஎன்று உலகம் இகழ்ந்து பழிப்பது அழகேயோ? மநுகுலத்தில் தசரத மஹாராஜனுக்கு மகனாக வந்துதித்து, வஸிஷ்ட கௌசிகரை ஆசிரியராகப் பெற்று, மஹாயோகியான ஜனகனை மாமனாக எய்தி, தன்னுயிர்போல் மன்னுயிரைப் புரக்கும் மன்னனும் பதவியும் இனிதின் உற்று, நானிலமுழுதும் நன்னெறியிற் செல்லுதற்கு நல்லொழுக்கங்களை நடத்திக்காட்ட எழுந்த நரேந்திரனாகிய நானே, இவ்வாறு சரணமென்றானை மரணமொன்றப் புரிந்திடில், மற்று ஈண்டுள்ளார் எந்தப்பாபத்தைத்தான் செய்யமாட்டார்கள்? அடைக்கலம்புகுந்தானை ஆதரியாதவர் வானவரேனும், மக்களேனும், அவர்கள் பதடிகளெனப் பகராநிற்கும் இவ்வுலகம். எப்படிப்பட்ட ஆபத்துக்கும் அஞ்சாது, அடைக்கலங் காத்தலென்ற அரிய பெரிய அறப்பொருளைத்

தேடிக்குவித்தவர்தாம், தம் சீர்த்தியாகிய வெண்டுகிலால் இப்பாரிடத்தைப் போர்த்திருக்கின்றனரென்பர் ஆன்றோர். சரணம்புக்கானைக் காக்கத் திறனற்ற ஒருவன், அவனது சாவைக் கண்ணுறுவானாயின், அவன் அதுகாறும் தேடிய அறத்தொகையனைத்தும் அச்சரணம்புக்கானைச் சார்வதன்றியும், அவனது பாதகங்களெல்லாம் இவனை வந்தடைகின்றன என்பர், அறநூலறிந்தோர். மற்றும், இவனுக்குரிய குலம், குணம், கல்வி, இசை ஆகிய இவையெல்லாம் பாழ்படுகின்றன. அடைக்கலங்காத்தலாகிய விரதமொன்றைக் கைக்கொண்டொழுகும் ஒருவன் மகமியற்றல்வேண்டா; மாதவம் புரிதல்வேண்டா; மற்றெவ்வகைப்பட்ட தருமங்களும் இயற்றவேண்டுவதில்லை; நல்லறமனைத்தும் சென்னெறி கேட்டுவந்து அவனை அடைகின்றன. பரமபதம் சார அவாவுறுவார்க்குக் குறுக்குநெறியாவது, அபயமென்றுரை அபயமுறுமாறு அளித்தலேயன்றி, வேறாக ஒன்றுளதென்று யான் நினைக்கவில்லை. ஆதலால், வாநராதிபரே! இப்பொழுதே நீங்கள் விரைந்து சென்று, அவ்வீடணனை இங்கு அழைத்துவரக்கடவீர். இதனால் வரும் அறனும் புகழும் எனக்குமாத்திரமல்ல; உமக்கும் இவற்றிற் கூறுகள் உளவாகும்" என்றருளினர்.

இவையனைத்துங் கேட்ட கதிரவன்மதலையோடு கவிப்படைத்தலைவர்யாவரும் மிகவும் வியப்புற்றனர்; அந்தத் தசகந்தரனே வந்து சரண்புகினும் அவனையும் யான் கைவிடமாட்டேனென்றருளிய ஸ்ரீராகவனது முகாரவிந்தத்தில் விளங்காநிற்கும் ஆனந்தத்தையும், அருளையும், மற்றுமுள்ள அனந்த கல்யாண குணவிசேஷங்களையும் நோக்கிநோக்கி, ஆனந்தஸாகரத்தில் ஆழ்வாராயினர்.

அப்பால், சுக்ரீவன், இருவீரரை வணங்கி, "பிரபு! பரமபாகவதோத்தமனுகிய அந்த விபீஷணுழ்வான் எனக்கு அத்தியந்தம் நேசனுக அனுக்கிரகித்தல் வேண்டும்" என்று பிரார்த்தித்து, தானே சென்று, அந்தப் பீடுடைய வீடணனை அளவளாவிக் காகுத்தன் திருமுன்னர் அழைத்துவந்தனன்.

இவ்வண்ணம் சக்ரவர்த்திதிருக்குமாரரை அடுத்த அரக்கர்கோன், அப்பிரானிடத்து அபாரசக்தியும், கருணை, சீலம் முதலிய எல்லா நற்குணங்களும் பண்டு தான் கேட்டவாற்றிற் பதின்மடங்கு அதிகப்பட்டிருத்தலைப் பிரத்தியக்ஷமாக அறிந்து, பரமானந்தபரவசனுய், நாத் தழுதழுப்ப வாழ்த்தி வணங்கிக் கூப்பிய

கையுடன் இராமபிரானை நோக்கி, "தீனதயாளுவே! இவ்வெளியேன், தாயினும் அன்புடைய தேவியைச் சிறைவைத்த அந்தச் சண்டாளனாகிய தசகந்தரனது தம்பி. என்னையும் ஏற்றுப் புரந்திரே! கருணையும் பொறுமையும் இனி நும்மிடத்தன்றி வேறெவரிடத்துள்ளனவாகும்? எனக்குரிய நாடும், நகரமும், அரசும், சம்பத்துக்களும், உடலும், உயிரும், இகபரங்களில் எய்துவனவாம் இன்பங்களும் ஆகிய எல்லாம் நுமக்குப்புரியும் கைங்கரியமே என்று துணிந்து வந்தடைந்தேனேயன்றி வேறன்று: அருள் புரிக" என, இராகவரும் உள்ளமுருகி அவனை அருகழைத்து, இலங்காராஜ்ய பட்டாபிஷேகமும் அவனுக்கு அப்பொழுதே செய்வித்து, அவனைத் தன்பக்கத்தில் இனிதுற வைத்துப் பாலிப் பாராயினர்.






# பிரகடனம்.

வேலூர் காலெஜ் தமிழ்ப் பிரதம பண்டிதர் பு. க. ஸ்ரீநிவாஸாசாரியரிடத்தில் இப்புஸ்தகம் விலைக்குக் கிடைக்கும்.

விலை அணா 2.

---

தவிரவும், ஷெயாரிடத்தில், மற்றும் பலவிதமான தமிழ்ப்புஸ்தகங்களும் விலைக்குக் கிடைக்கும். வேண்டியவர்க்குப் புஸ்தகவிளம்பரம் அனுப்பப்படும்.

---